Regd. No. TN/MS (C) 244 | ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) | Phone: 420212 | 4 பக்கம் விலை 45 காசு

**எண்ணக்கழனி**

எண்ணமெனும் கழனியிலே எத்தனையோ விளைகின்றன. அவற்றின் பயன் யாவும் கண்டறிந்து எடுத்துச் சுவை பெறல் அறிவுடைமை.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

**நிறுவனர்: எம்.ஜி.ஆர்**

**முக்கியம்**

நம் பிள்ளைகளுக்கு ஒழுக்கந்தான் மிக முக்கியம். அதை வளர்க்கும் முயற்சியில் ஈடுபடுவதுதான் இன்றைய இன்றியமையாக் கடமை.

-தந்தை பெரியார்

மலர்: 7 | சென்னை 22-2-83 செவ்வாய் | வெளியூர் 23-2-83 புதன் | இதழ்: 125

திருச்செந்தூர் தொகுதி மெய்ஞானபுரத்தில் நடந்த பிரமாண்டமான கழக தேர்தல் பிரச்சார கூட்டத்தில் கழக கொள்கைப் பரப்புச்செயலாளர் செல்வி ஜெயலலிதா பேசினார். கழக வேட்பாளர் ஆர். அமிர்தராஜ் உடனிருக்கிறார்.

—படம்: ஸ்டுடியோ பாப்பு திருச்செந்தூர்.

## கொளுத்தும் வெயிலில் - திறந்த ஜீப்பில்

## திருச்செந்தூரில் வீதிவீதியாக

# ஜெயலலிதா ஓட்டு சேகரிப்பு

## மிரட்டலுக்கு அஞ்சாமல் ஓட்டுப் போட கோரிக்கை

**தூத்துக்குடி, பிப். 22- கொளுத்தும் வெய்யிலில் திருச்செந்தூரில் இன்று திறந்த ஜீப்பில் சென்று வீதிவீதியாக கழகத்துக்கு ஆதரவு திரட்டினார் செல்வி ஜெயலலிதா.**

**மிரட்டலுக்கு அஞ்சாமல் ஓட்டுப் போடும்படி தாய்மார்களுக்கு அவர் கோரிக்கை விடுத்தார்.**

திருச்செந்தூர் தொகுதியில் கழகத்திற்கு ஆதரவாக தேர்தல் பிரச்சாரம் உச்சகட்டத்தை அடைந்துள்ளது.

கழக முன்னணியினரும், தோழர்களும் இரவு பகலாக மக்களைச் சந்தித்து ஆதரவு திரட்டி வருகிறார்கள்.

இன்று காலை 10 மணிக்கு கழக கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா திருச்செந்தூரில் திறந்த "ஜீப்"பில் சென்று பிரச்சாரம் செய்தார். சிவன் கோவில் அருகில் இருந்து ஊர்வலம் தொடங்கியது.

முன்னால் ஒரு காரில் "மைக்" வைத்து செல்வி ஜெயலலிதா திறந்த ஜீப் காரில்பிரச்சாரம் செய்து வருவதை அறிவித்துச் சென்றனர்.

### சாரி சாரியாக மக்கள்

சில நிமிடப் பொழுதில் ஏராளமான தாய்மார்களும் பெரியவர்களும் வீதிகளின் இருமருங்கிலும் சாரிசாரியாகக் கூடிவிட்டனர்.

கொளுத்தும் வெய்யிலில் திறந்த "ஜீப்"பில் நின்றபடி பொதுமக்களுக்கு வணக்கம் தெரிவித்தார்.

பொதுமக்கள் உற்சாக மிகுதியால் வாழ்த்து முழக்கமிட்டு, கழகத்திற்கு ஆதரவு தெரிவித்தனர்

"அண்ணா நாமம் வாழ்க"

"புரட்சித் தலைவர் வாழ்க"

"எங்கள் ஓட்டு இரட்டை இலைக்கே"

என்ற முழக்கங்கள் விண்ணைப் பிளந்தன.

தாய்மார்கள் சிலர் ஆர்வத்துடன் "ஜீப்"பைத் தொடர்ந்து "குடு குடு" என்று ஓடி வந்து செல்வி ஜெயலலிதாவுடன் கை குலுக்கி வாழ்த்து தெரிவித்தனர்.

### வெற்றித் திலகம்

சில தாய்மார்கள் அவருக்கு வெற்றித் திலகமிட்டு வாழ்த்தினார்கள். ஆரத்தி எடுத்த தாய்மார்கள் பலர்!

திருச்செந்தூர் நகரும் புரட்சித்தலைவரின் கோட்டையே என்று பறை சாற்றியது இந்த திறந்த "ஜீப்" பவனி!

திருச்செந்தூரில் 4 ரத வீதிகளிலும் முக்கிய வீதிகளிலும் சென்று செல்வி ஜெயலலிதா ஆதரவு திரட்டினார்.

### வாக்காளர் மத்தியில்

ஜீப்பின் பின்னால் ஏராளமான கழகத் தோழர்கள் சைக்கிள்களில் சென்று ஆதரவு திரட்டினார்கள்.

வாக்காளர்கள்மத்தியில் அவ்வப்போது செல்வி ஜெயலலிதா பேசினார் அவர் கூறியதாவது:-

இந்தத் தேர்தலில் தாய்மார்களை வாக்களிக்க விடாமல் தடுக்க சிலர் மிரட்டலில் ஈடுபடக்கூடும்.

தாய்மார்கள் இத்தகைய மிரட்டல்களுக்கு அஞ்சாமல் வாக்குச் சாவடிகளுக்குச் சென்று தவறாமல் வாக்களிக்க வேண்டும் எனக் கேட்டுக்கொள்கிறேன்.

தாய்மார்கள் உட்பட வாக்காளர்கள் பயமின்றி வாக்களிக்கஅரசு போதிய பாதுகாப்பு ஏற்பாடுகளை செய்துள்ளது

இவ்வாறு செல்வி ஜெயலலிதா பேசினார்.

---

**திருச்செந்தூர் தொகுதியில்**

## புரட்சித்தலைவர் சுற்றுப்பயணம்

| | |
|---|---|
| 23-ந்தேதி மாலை மணி 7: | பெரியதாழை கொடியேற்றுவிழா |
| இரவு 8 மணி: | படுக்கப்பத்தில் காமராஜர் சிலை திறப்பு விழா |
| இரவு 9 மணி: | உடன்குடி பொதுக் கூட்டம் |
| 24-ந் தேதி: | உடன்குடி ஒன்றிய பகுதி முழுவதும் பிரச்சாரம் |
| மாலை: | மெய்ஞானபுரம், மணப்பாடு, குலசேகரப்பட்டினம் பொதுக் கூட்டங்களில் பங்கேற்பு |
| 25-ந் தேதி | திறந்தவேனில் திருச்செந்தூர் ஒன்றியம்முழுவதும் பிரச்சாரம் |
| இரவு: | ஆறுமுகனேரி, காயல் பட்டினம், பொதுக் கூட்டம் |
| 26-ந் தேதி: | திருச்செந்தூர் ஒன்றியப் பகுதி ஆழ்வார் திருநகரி ஒன்றியப் பகுதியில் பிரச்சாரம் |
| இரவு: | புன்னைக்காயல், ஆத்தூர்- பொதுக் கூட்டம் |
| 27-ந் தேதி: | வீரப்பாண்டியன் பட்டினம், ஆலந்துறை, அமலி நகர் 3 மீனவப்பகுதிகளில் திறந்த வேனில் தேர்தல் பிரச்சாரம் |
| மாலை3 மணி: | திருச்செந்தூர் வ.உ.சி. திடலில் பிரச்சாரக் கூட்டம் |

கருப்பசாமிபாண்டியன்,
எஸ். ஆர். ராதா, இரா. கிருஷ்ணன்.
(திருச்செந்தூர் தேர்தல் குழு)

---

**திருச்செந்தூரில் இடைத்தேர்தல் வரும் என**

# கேசவ ஆதித்தன் மறையும் முன்பே தி. மு. க. பிரச்சாரம்

## செல்வி ஜெயலலிதா தகவல்

**தூத்துக்குடி, பிப். 22- திருச்செந்தூரில் இடைத்தேர்தல் வரும் என்று கேசவஆதித்தன் மறையும் முன்பே தி. மு. க. வினர் பேசி வந்த விஷயம் வெளியாகியுள்ளது.**

கேசவ ஆதித்தனின் மனைவி முதல்வர் புரட்சித் தலைவரிடம் கொடுத்துள்ள கடிதத்தில் மேற்கண்ட தகவல் குறிப்பிடப்பட்டிருப்பதாக செல்வி ஜெயலலிதா கூறினார்

கழக வேட்பாளர் அமிர்தராஜை ஆதரித்து நடைபெற்ற எழுச்சிமிகு பிரும்மாண்டமான கூட்டம் திருச்செந்தூரில் நேற்று இரவு நடைபெற்றது. செல்வி ஜெயலலிதா இந்தக்கூட்டத்தில் பேசினார்.

செல்வி ஜெயலலிதாவின் பேச்சைக் கேட்க தாய்மார்கள் பெருந்திரளாக கூடியிருந்தனர். பொதுக் கூட்டமா? இல்லை மாநாடா என்று வியக்கும்வண்ணம்கூட்டம் நிரம்பியிருந்தது. செல்வி ஜெயலலிதாவைக் கண்டவுடன் மக்கள் உற்சாகமாக இரண்டு விரலைக் காட்டி தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்தனர். செல்வி ஜெயலலிதாவும் இரண்டு விரலை உயர்த்திக்காட்டி தனது மகிழ்ச்

(2-ம் பக்கம் பார்க்க)

---

மின் கட்டண சர்சார்ஜ்

# தனி நபர் கமிஷன் நியமனம்

சென்னை, பிப். 22— தமிழகத்தில் உயர் அழுத்த மின்சாரத்தைப் பயன்படுத்தும் தொழிற்சாலைகளுக்கான மின்சார கட்டணத்தின் மீது யூனிட்டுக்கு 45 காசு வீதம் விதிக்கப்பட்டுள்ள சர்சார்ஜ் பற்றி ஆய்வு செய்து அறிக்கை சமர்ப்பிக்குமாறு தனி நபர்

(6-ம் பத்தி பார்க்க)

(8-ம் பத்தி தொடர்ச்சி)

கமிஷன் ஒன்றை தமிழக அரசு நியமித்துள்ளது.

இது பற்றி அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் நிருபர்களிடம் கூறியதாவது:-

தலைமை செயலாளர் அந்தஸ்தில் உள்ள சி வி ஆர் பணிக்கர் தலைமையில் இந்த தனி நபர் கமிஷன் நியமிக்கப்பட்டுள்ளது.

இவர் எல்லா வகையான தொழிற்சாலைகளைப் பற்றிய நிலைமையை ஆராய்ந்து மார்ச் 15-ம்தேதிக்குள் அரசுக்கு அறிக்கை கொடுப்பார்

அந்த அறிக்கை மீது அரசு முடிவை அறிவிக்கும் வரை இந்த சர்சார்ஜ் கட்டணமாக யூனிட்டுக்கு 45 காசை சம்பந்தப்பட்ட தொழிற்சாலைகள் கட்டாமல் நிறுத்தி வைக்க அனுமதிக்கப்படுகிறார்கள்.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் நிருபர்களிடம் கூறினார்.

---

தோற்றம்: 5-3-1926; மறைவு: 23-2-1977

இந்த நாளில் தங்களைப் பிரிந்தோம்!
எந்த நாளும் தங்கள் நினைவுகளோடும்
உணர்வுகளோடும் வாழ்கிறோம்.

**ஈ. வெ. கி. சுலோசனாசம்பத்**
குடும்பத்தினர்

அரசியலுக்கு அப்பாற்பட்ட

# உணவு பிரச்னையை பிரதமரிடம் விளக்கியதில் எந்த அரசியலும் இல்லை

## கவர்னர் குரானா பேட்டி

சென்னை, பிப். 22- ஒரு நாட்டின் உணவுப் பிரச்சினை அரசியலுக்கு அப்பாற்பட்டது. ஏழை எளிய மக்களை பாதிக்கும மிக முக்கியமான உணவுப் பிரச்சினையை நான் அண்மையில் டெல்லி சென்றிருந்தபோது பிரதமரிடம் விளக்கிக் கூறினேன் இதில் எந்தவிதமான அரசியலும் இல்லை என்று தமிழக ஆளுனர் எஸ் எல். குரானா திட்டவட்டமாக கூறினார்.

ஆளுனர் குரானா சென்னை பத்திரிகையாளர் சங்கத்துக்கு (பிரஸ்கிளப்) வருகை தந்தார்.

ஒரு மாநிலத்தில் ஆளுனரின் பொறுப்பு மற்றும் அது சம்பந்தப்பட்ட பல்வேறு பணிகள் குறித்து உறுப்பினர்கள் அப்போது கேள்விகள் எழுப்பினார்கள்.

கேள்விகளுக்குப் பதில் அளித்து பேசுகையில் குரானா கூறியதாவது:—

நான் பதவி ஏற்றவுடனே அரசு செயலாளர்கள் மற்றும் பல்வேறு இலாக்காக்களின் தலைமை அதிகாரிகளுடன் ஆலோசனை நடத்தி தமிழகத்தின் நிலைமைகளை தெரிந்து கொண்டேன்.

### மாதம் 2 மாவட்டம்

மாதத்திற்கு இரண்டு மாவட்டங்கள் என்ற நிலையில் நான் சுற்றுப் பயணம் செய்கிறேன் பொதுமக்களின் குறைகளையும் நேரில்கண்டறிகிறேன். அவர்களின் கோரிக்கைகள், முறையீடுகள் ஆகியவற்றையும் பெற்று நடவடிக்கை எடுக்கிறேன் மாநிலத்தில் ஏற்படும் அவ்வப்போதைய பிரச்னைகளையும் நான் ஆராய்கிறேன்

அண்மையில் டெல்லி சென்றபோது பிரதமரைச் சந்தித்து தமிழக உணவு கோரிக்கையை குறித்து விளக்கினேன்.

ஒரு நாட்டின் உணவுப் பிரச்சினை அரசியலுக்கு அப்பாற்பட்டது.

### இதில் அரசியல் இல்லை

ஏழை எளிய மக்களை பாதிக்கும் மிக முக்கியமான உணவுப் பிரச்சினையை நான் அண்மையில் டெல்லி சென்றிருந்தபோது பிரதமரிடம் விளக்கிக்கூறினேன். இதில் எந்த விதமான அரசியலும் இல்லை.

அரசியல் சட்டத்தில் கவர்னருக்கு வழங்கப்பட்டுள்ள அதிகாரங்களை நான் ஒருபோதும் மீறியதில்லை. இனி மீறும் எண்ணமும் கிடையாது. உணவுப் பிரச்சினையில் நாட்டின் ஒவ்வொரு குடிமகனுக்கும் அக்கறை உண்டு.

ஒரு மாநிலத்தில் உள்ள பிரச்சினைகளை மத்திய அரசுக்கு எடுத்துச் சொல்லும் கடமை, பொறுப்பு ஆகியவை அரசியல் சட்டத்தில் ஆளுனருக்கு வழங்கப்பட்டுள்ளது அதைத்தான் நான் டெல்லிக்கு சென்றிருந்தபோது செய்தேன். இதில் அரசியல் இல்லை.

சிறிய பத்திரிகையானாலும் பெரியபத்திரிகையானாலும் நாட்டுமக்களின் நலன்களில் அக்கறை கொண்டு செய்திகளை வெளியிட வேண்டும். மாறாக சில பத்திரிகைகள் தவறான செய்திகளையும், பொய்ச்செய்திகளையும் பிரசுரித்து பொதுமக்களின் கவுரவத்தை சீர்குலைக்கின்றன. இது முற்றிலும் தவறு. இது தவிர்க்கப்படவேண்டும். தனிப்பட்ட முறையில் ஒருநபரை கேவலப்படுத்தி எழுதுவது எவ்வளவு ஆபத்தானது என்பதைப் பத்திரிகைகள் உணரவேண்டும்.

### பொறுப்பற்ற பேச்சு

செய்தி தவறாக இருந்தால் மான நஷ்ட வழக்கு போடலாம் என்று கூறுவது வேறு. ஆனால் தீர விசாரிக்காமல் ஒருவரைப்பற்றி தாறுமாறாக எழுதிவிட்டு அவர்கள் நீதிமன்றம் செல்லட்டும் என்றால் இது எவ்வளவு பொறுப்பற்ற பேச்சு. எழுதும்போதே எது நியாயம், எது உண்மை, இந்த செய்தி பொது மக்களின் கவுரவத்தை எந்த அளவுக்கு பாதிக்கும் என்றெல்லாம் தீர ஆலோசித்து எழுத வேண்டும். அது தான் பத்திரிகைகளின் கடமை. ஒருவரைப்பற்றி மாசு கற்பிக்கும் வகையில் செய்திகள் எழுதுவதைப் பத்திரிகைகள் தவிர்க்க வேண்டும்.

பாதிக்கப்பட்டவர்கள் உண்மை விவரங்களைக் கூறி விளக்கம் தர வருவார்களேயானால் அந்த விளக்கத்தையும் பத்திரிகை பிரசுரிக்க வேண்டும் அதுதான் நியதி.

என்னையும் சில பத்திரிகைகள் விமர்சித்து எழுதின. பொய்யான செய்திகளை வெளியிட்டன. அதை மறுத்து நான் விளக்கம் அளிக்க முயன்ற போது எனக்கு வாய்ப்பளிக்காமல் மறுக்கப்பட்டது.

இவ்வாறு ஆளுனர் குரானா பேசினார்.

முன்னதாக சங்கத் தலைவர் பார்த்தசாரதி வரவேற்றுப் பேசினார் "பிரஸ் கிளப்" செயலாளர் ஆர். கே. கே. மேனன் நன்றி கூறினார்

சாராயம் கடத்திய

### இருவர் தடுப்புக் காவலில் கைது

சென்னை, பிப். 22— அம்பாசிடர் காரில் சாராயம் கடத்தி வந்த இருவரை தடுப்புக்காவலில் வைக்க போலீஸ் கமிஷனர் ஸ்ரீபால் உத்திரவிட்டார்.

அண்ணா நகரைச் சேர்ந்த அப்துல்காதர், டி. பி. சத்திரத்தைச் சேர்ந்த லூயிஸ் ஆகிய இருவரும் ரூ 50 ஆயிரம் மதிப்புள்ள சாராயத்தைக் கடத்தி வந்தபோது பிடிபட்டனர்.

(8 ம் பத்தி தொடர்ச்சி)

விடம் கூறினார்).

மனம் திருந்தி வந்துள்ளதாக அவரே கூறுகிறார்.

கோசல்ராம், நெடுமாறன் போன்றவர்கள் கூட அபிடவிட் தாக்கல் செய்தனர். அவர்களும் கமிஷன் முன் சாட்சி கூற மறுத்து விட்டார்கள். மக்கள் விழிப்புணர்ச்சியுடன் இருக்கிறார்கள் மக்களை ஏமாந்தவர்கள் என்று எண்ணினால் ஏமாந்து போவீர்கள்.

இவ்வாறு செல்வி ஜெயலலிதா பேசினார். இந்தக் கூட்டத்தில் கழகவேட்பாளர் அமிர்தராஜ், அனகாபுத்தூர் ராமலிங்கம் எம்.எல்.சி. கருப்பசாமி பாண்டியன் எம். எல். ஏ. உட்பட பலர் பேசினர். இரவு 11-30க்கு தன் பேச்சைத் தொடங்கிய செல்வி ஜெயலலிதா 12-20க்கு முடித்தார். செல்வி ஜெயலலிதாவின் பேச்சைக் கேட்க தாய்மார்களும், பெரியவர்களும் உற்சாகத்தோடு திரளாக கூடியிருந்து கூட்டம் முடியும் வரை அமைதியாக இருந்து ஆர்வத்தோடு கேட்டனர்.

பெரியகுளத்தில்

# டெபாசிட் இழந்தவர்கள் திருச்செந்தூரில் சவால் விடுவதா?

## இ. காங்கிரசுக்கு காளிமுத்து சூடு

தூத்துக்குடி, பிப். 22- பெரியகுளத்தில் டெபாசிட் இழந்தவர்கள திருச்செந்தூரில் சவால் விடுவது வேடிக்கையாக இருக்கிறது என்று அமைச்சர் காளிமுத்து கூறினார்

திருச்செந்தூர்தொகுதியில் கழக வேட்பாளர் ஆர். அமிர்தராஜை ஆதரித்து பல்வேறு தேர்தல் பிரச்சாரப் பொதுக் கூட்டங்களில் கலந்து கொண்டு பேசுகையில் அமைச்சர் காளிமுத்து கூறியதாவது!

டெல்லி முனிசிபாலிடி தேர்தலில் வெற்றி பெற்றதை பெரிய வெற்றி எனக் கருதி இந்திரா காங்கிரசார் பேசுகிறார்கள்.

பெரியகுளத்தில் டெபாசிட் போன பிறகும் திருச்செந்தூரில் நின்று சவால விடுவதை கேட்டால் ஆச்சரியமாக உள்ளது.

இதற்கு அவர்களின் ஆதிக்க உணர்வுதான் காரணம்.

அரசியல் சட்டத்தில் 356-வது பிரிவு இருக்கிறத்த என்ற ஏகாதிபத்திய உணர்வுகள் தான் அந்த சவாலுக்கு அடிப்படைக் காரணமாகும். அதனால்தான் சென்னையிலே ஒரு எம். பி. தலைமையில் போய் மனு கொடுத்துள்ளார்கள்.

### மிரட்டல் வேண்டாம்

தமிழக மக்களுக்கு நல்லது செய்யும் இந்த ஆட்சியை கலையுங்கள் என்று மனுவில் குறிப்பிட்டு இருக்கிறார்கள்.

இது போன்ற மிரட்டல்கள் எல்லாம் கடந்து போன காலத்தோடு சரி. இனிமேல் செல்லுபடியாகாது. ஒரு காலத்தில் காங்கிரஸ் என்பது விடுதலைவேள்வியில் ஈடுபட்டது என்பது உண்மை.

அந்த தியாகிகளை மதிக்கிறோம். வணங்குகிறோம். அவர்களின் பெயர் நிலைப்பதற்கு என்னென்ன செய்யவேண்டுமோ, அவற்றை தமிழக அரசு செய்து வருகிறது.

காமராஜர் பல்கலைக் கழகம், காமராஜர் சிலை, காமராஜர் சாலை, சட்டமன்றத்தில் காமராஜர் படத் திறப்பு. அரசின் சார்பில் காமராஜரின் பிறந்ததின விழா முதலியவற்றை செய்கிறோம்.

தேசியப் போராட்டத்தில் ஈடுபட்ட பிற தியாகிகளையும் மதிக்கிறோம்.

ஆனால் அந்தக் காங்கிரசுக்கும், இன்று இருக்கிற காங்கிரசுக்கும் எந்தவித ஒற்றுமையும் இல்லை.

இப்படிப்பட்ட நிலையில், இந்திரா காங்கிரசார், இங்கு போர்முரசு கொட்டுகிறார்கள.

கழக வேட்பாளர் ஆர். அமிர்தராஜ் வெற்றி பெறுவது உறுதிஎன்பதை உங்கள் உற்சாகமே எடுத்துக் காட்டுகிறது.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து பேசினார்.

திருச்செந்தூர் தேர்தல்:

### மேற்பார்வை அதிகாரி

சென்னை, பிப். 22— திருச்செந்தூர்சட்டமன்ற தொகுதி இடைத்தேர்தலில் மேற்பார்வையாளராக எஸ். ஆர். கருப்பண்ணன் ஐ. ஏ. எஸ். நியமிக்கப்பட்டுள்ளார்.

### செல்வி ஜெயலலிதா தகவல்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

சியைத் தெரிவித்தார்.

இந்தக் கூட்டத்தில் செல்வி ஜெயலலிதா பேசுகையில் கூறியதாவது:—

கோசல்ராம் கூட்டங்களில் பேசும்போது எம்.ஜி.ஆர். வேண்டுமா? நான் (கோசல்ராம்) வேண்டுமா என்கிறார்? தமிழகத்திற்கு யார் வேண்டுமென்று மக்களே தீர்ப்பளித்து விட்டார்கள். யார் தலைவர் என்று உங்களுக்குள்ளேயே அடிப்டி சண்டையிருக்கிறது.

பெரிய குளத்தில் டெபாசிட் இழந்த கட்சி கழகஆட்சிடிஸ்மிஸ்செய்யப்பட வேண்டுமென்று கூறுவது என்ன நியாயம்?

விபத்தில் கேசவ ஆதித்தன் மரணம் அடைந்தார். கேசவ ஆதித்தனின் துணைவியார் முதல்வரிடம் ஒரு கடிதம் கொடுத்தார்.

அந்தக் கடிதத்தில் தன் தலைவர் (கேசவ ஆதித்தன்) மறைவுக்கு முன்பே தி.மு.கவினர் திருச்செந்தூரில் இடைத்தேர்தல் வரும் என்று பேசினார்கள் எனவே தன் தலைவர் மறைவு குறித்து சந்தேகப்படுவதாகக்குறிப்பிட்டிருந்தார்.

கேசவஆதித்தன் மறைவால் சுப்பிரமணிய பிள்ளை மரணத்துக்கு நீதி கிடைத்து விட்டது என்கிறார்கள்.

இது எந்த அளவிற்கு அந்தத் தாயின் மனதைப் புண்படுத்தியிருக்கும் என்பதை சற்று எண்ணிப் பார்க்க வேண்டும்.

பால் கமிஷன் கூறியது என்ன? கொலையாகவோ அல்லது தற்கொலையாகவோ இருக்கலாம் என்பதுதான் நீதிபதியின் கருத்து.

அறங்காவலர் குழுவை நீக்க அரசுக்கு அதிகாரமில்லை. இருந்தாலும் அறங்காவலர் குழு ராஜினாமாவுக்கு பரிந்துரை செய்யலாம். ஆனால் அவர்களாகவே முன்வந்து தங்கள் ராஜினாமாவைக்கொடுத்தனர். புலனாய்வுத் துறை (சி. ஐ. டி.) விசாரணை நடந்து கொண்டிருக்கிறது. அது இன்னும் முடியவில்லை.

பால் கமிஷன் முன் புகார் கொடுத்தவர்கள் விசாரணையின் போது வரவில்லை. தி. மு. க. வினர்தான் கொலை என்கிறார்கள். தி.மு.கவைச் சேர்ந்த நெல்லையப்பன் என்பவர் அபிடவிட் தாக்கல் செய்திருந்தார். ஆனால் கமிஷன் முன்பு சாட்சியம்கூற மறுத்து விட்டார்.

அதுபோல் தி. மு. க மாவட்டச் செயலாளராக இருந்தகிருஷ்ணனும் அபிடவிட் தாக்கல் செய்திருந்தார். அவரும் விசாரணைக்கு வரவில்லை. கருணாநிதியின் போக்கால்மனம்வெதும்பி அவர் இன்று கழகத்தில் இணைந்துள்ளார்.

(உடனே மேடையில் இருநத கிருஷ்ணன் மனம் திருந்து வந்துள்ளேன் என்றுசெல்வி ஜெயலலிதா

(4-ம் பத்திபார்க்க)

திருச்செந்தூரில்

# கழக வெற்றியை எந்த சக்தியாலும் தடுக்க முடியாது

## அமைச்சர் ராஜாமுகமது உறுதி

காயல்பட்டினம், பிப். 22- திருச்செந்தூர் தேர்தலில் கழகததின் வெற்றியை எந்த சக்தியாலும் தடுத்து நிறுத்திவிட முடியாது என அமைச்சர் ராஜாமுகமது கூறினார்.

காயல்பட்டினத்தில் கழகதேர்தல் அலுவலகத்தைத் திறந்து வைத்துப் பேசுகையில் அமைச்சர் ராஜாமுகமது கூறியதாவது:-

சத்துணவுத் திட்டம், தன்னிறைவுத் திட்டம், குடும்பத்திறகு ஒருவருக்கு வேலை போன்ற மக்கள் நலத்திட்டங்களை குறை கூறியவர்கள் பெரிய குளத்தில் மூழ்கிப் போனார்கள்.

கழகம் என்பது வெறும் அரசியல் கட்சி அல்ல. அது ஒரு மக்கள் இயக்கம். அதனால் தான் கட்சி வேறுபாடு பார்க்காமல், மக்களுக்காக பாடுபட்ட தலைவர்களை கழக அரசு கவுரவப்படுத்தியுள்ளது.

முதல்வர் புரட்சித் தலைவர் இஸ்லாமிய மக்களுக்கு செய்த நன்மைகளை திரையிட்டு மறைத்துவிட முடியாது. முஸ்லிம்கள் பெரும்பான்மையாக உள்ள காஷ்மீர் மாநிலம் உட்பட எந்த மாநிலத்திலும் நடைபெறாத நல்லகாரியங்கள் இந்த ஆட்சியில் நடைபெற்றுள்ளன. உலமாக்கள் ஓய்வூதியத் திட்டம், ஒரு கோடி ரூபாய் நிதி ஒதுக்கி 2500க்கு மேற்பட்ட பள்ளி வாசல்கள், மற்றும் மதரசாக்களை புதுப்பிக்கவும், பராமரிக்கவும் முடிவு, ஹஜ் பயணிகள் தங்க சென்னையில் 1½கோடி ரூபாய்செலவில் கட்டிடம் கட்ட ஏற்பாடு.

### கோரிக்கை

மரைக்காயர் மற்றும் ராவுத்தர்களை பிற்பட்டோர் பட்டியல்களில் இடம் பெற செய்தது.

இவ்வாறு கழக அரசு முஸ்லிம் பெருமக்களுக்கு எவ்வளவோ நன்மைகளைச் செய்துள்ளது.

கழக வேட்பாளர் அமிர்தராஜுக்கு அனைத்து வாக்காளர்களும் வாக்களிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் ராஜாமுகமது கூறினார்.

காயல் பட்டினத்தில்

பெண்கள் மத்தியில்

# செல்வி ஜெயலலிதா தேர்தல் பிரச்சாரம்

திருச்செந்தூர், பிப். 22- தீவிர தேர்தல் பிரச்சாரம் செய்து வரும் கழக கொள்கைபரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா நேற்று மாலை 5 மணிக்கு காயல் பட்டினம் சென்றார்.

இஸ்லாமிய சமுதாய மக்கள் நிறைந்த அந்தப் பகுதியில் அவர் கழக வேட்பாளர் அமிர்தராஜுக்கு ஆதரவாக வாக்குகள் கேட்டார்.

ஆயிரத்துக்கும் அதிகமான முஸ்லிம் பெண்கள் மத்தியில் அவர் பிரச்சாரம் செய்தார். இதில் முழுக்க முழுக்க பெண்களே இருந்தனர். ஆண்கள் அனுமதிக்கப்படவில்லை. பெண்கள் கோஷா அணிந்து இருந்தனர். அவர்கள் மத்தியில் கழக கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா தீவிர தேர்தல் பிரச்சாரம் செய்தார்.

# பேசுவதை குரைப்பது என்று சொல்லலாம்: மாநிலங்களவையில் தீர்ப்பு

புதுடெல்லி, பிப். 22— மனிதர்கள் பேசுவதைக் குரைப்பது என்று கூறலாமா? இப்படி ஒரு சர்ச்சை மாநிலங்களவையில் எழுந்தது.

இந்த சர்ச்சை பெரிதாக எழ குரைத்தல் என்ற வார்த்தையைப் பயன்படுத்தலாம் என்று தீர்ப்பு வழங்கப்பட்டது.

மாநிலங்களவையில் அசாம் கலவர நிலவரம் பற்றிய விவாதம் நடைபெற்றுக்கொண்டு இருந்தது

அப்போது இந்திரா காங்கிரசைச் சேர்ந்த ராமானந்த் யாதவ்பேசிக் கொண்டு இருந்தார்.

அப்போது எஸ். காங்கிரசைச் சேர்ந்த எ.ஜி. குல்கர்னி குறுக்கிட்டார்.

குறுக்கீட்டை சகிக்காத யாதவ் குரைப்பதை நிறுத்துங்கள் என்றார்.

குல்கர்னி குறுக்கீட்டை குரைப்பது என்று யாதவ் கூறியதை பல எதிர்க்கட்சி உறுப்பினர்கள் கடுமையாக ஆட்சேபித்தனர்.

அப்போது சபைக்கு துணைத்தலைவர் நஜ்மா ஹெப்குல்லா தலைமை வகித்து சபையை நடத்தி வந்தார்.

எதிர்க்கட்சியினர்பலரும் குரைப்பது என்று யாதவ் கூறியவார்த்தையை சபைக் குறிப்பில் இருந்து நீக்கவேண்டும் என்று கோரினார்கள்.

இதன் மீது துணைத்தலைவர் தீர்ப்புக் கூறினார். விதிகளின்படி பேசுவதை குரைத்தல் என்று சொல்வது பாராளுமன்ற வார்த்தைதான் என்று தீர்ப்புக்கூறினார்.

சபையில் கூச்சலுக்கு இடையே இந்த தீர்ப்பை வழங்கினார்.

அப்போது எதிர்க்கட்சியினர் அப்படியானால் யாதவ் குரைப்பதை தொடரட்டும் என்றனர்.

# சைக்கிளில் சென்று குழந்தைவேலு பிரச்சாரம்

திருச்செந்தூர், பிப். 22- திருச்செந்தூர் நகரில் அமைச்சர்குழந்தைவேலு இன்று சைக்கிள் ஊர்வலத்திற்கு தலைமை தாங்கி தேர்தல்பிரச்சாரம் செய்தார்.

உள்ளாட்சித்துறை அமைச்சர் குழந்தைவேலு முன்னால் சைக்கிளில் வர பின்னால் சைக்கிளில் ஏராளமான கழகத் தோழர்கள் கழகக்கொடி ஏந்தி ஊர்வலமாக வந்தனர் பஸ் நிலையத்திலிருந்து இந்த ஊர்வலம் தொடங்கியது 4 ரத வீதிகளுக்கும் சென்று கொளுத்தும் வெயிலில் ஆதரவு திரட்டினார்கள்.



ஊர்வலத்தில் எம் எல் ஏ.க்கள் கோவைத்தம்பி, ஆர். கே. பெருமாள். மற்றும் ராமசுப்பிரமணியன். பழக்கடைபாண்டி. இசக்கிமுத்து, சிதம்பரம் ஆகியோர் உட்பட 2500 பேர் சைக்கிள் ஓட்டிவந்தனர்.

ஆங்காங்கே வாக்காளர்களைச் சந்தித்து கழகத்திற்கு வாக்களிக்குமாறு கேட்டுக் கொண்டனர். கொளுத்தும வெய்யிலில் சைக்கிளில் தங்களை நாடி வந்த அமைச்சரை வாக்காளப் பெருமக்கள் உற்சாகமாக வரவேற்றனர்.

வ.உ.சி. திடலில் ஊர்வலம் நிறைவுபெற்றது.

சத்துணவுதிட்டம் தந்த சரித்திர நாயகனுக்கு வெற்றிக் கனியளிக்க விரைந்து செயல்படு!



## பொருளாளர் மாதவன் பேச்சு:

# காவிரி பிரச்னையில் இ. காங்கிரசாரின் இரட்டை வேடம்

**சென்னை, பிப். 22- காவிரி பிரச்னை தொடர்பான ஒரு திட்டத்தை இ· காங்கிரசார் எதிர்த்தனர். அதே திட்டத்தை ஏற்காதது ஏன் என்று இப்போது நம்மை கேட்கின்றனர் என்று கழகப் பொருளாளர் மாதவன் கூறினார்.**

சென்னை கொண்டித் தோப்பு, சிவஞானம் பூங்கா அருகே நடந்த பெரும்மாண்டமானகழகப் பொதுக் கூட்டத்தில் கலந்து கொண்டு பேசுகையில் கழகப் பொருளாளர் மாதவன் கூறியதாவது:-

எதற்கும் அஞ்சாத கொள்கை மறவர் கூட்டம் இருப்பதுதான் இந்த இயக்கம். இந்த எண்ணத்தில் தான் அனைத்திந்திய அண்ணா தி. மு. க. வில் லட்சோப லட்சம் இளைஞர்கள் பணி வருகிறார்கள்.

அப்படிப்பட்ட இந்த இயக்கத்தை அழித்துவிடலாம் என்று சிலர் கருதுகிறார்கள்.

முதல்வர் புரட்சித்தலைவரைப் பார்த்து, அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தினரைப் பார்த்து. அண்ணாவின் தம்பிகளைப்பார்த்து பதவியை விட்டு இறங்கு என்று சிலர் மாறி மாறி சொல்கிறார்கள் என்று கழகத் தோழர்கள் இங்கே பேசுகையில்வருத்தப்பட்டனர் அவர்களுக்கு உண்மை புரிந்து இருக்கிறது.

முதல்வர் புரட்சித் தலைவரை தேர்தலில் வெற்றிகொண்டு அவரை பதவியை விட்டு இறக்க முடியாது என்று அவர்கள் தெரிந்து கொண்டிருக்கின்றனர். அவர் தான் இளகிய மனது உடையவர் ஆயிற்றே. அவராக இறங்கமாட்டாரா என்று எண்ணி, "பதவியை விட்டு இறங்கு பதவியை விட்டு இறங்கு" என்று கூறுகிறார்கள்.

யாராலும் எதிர்த்து வெற்றி கொள்ள முடியாத தலைவராக முதல்வர் புரட்சித் தலைவர் உள்ளார்.

பதவிக்காக போட்டியிட்டு இறக்க முடியாத தலைவரை எப்படியாவது இறங்க செய்யவேண்டும் என்று நினைக்கிறார்கள். பின்னர் தாம் வந்து ஆட்சியில் அமர வேண்டும் என்று நினைக்கிறார்கள்.

### கோட்டை விட்டவர்கள் காணும் கனவு

16 ஆண்டுகளாக கோட்டையை, கோட்டை விட்டவர்கள் இன்று கனவு காண்கிறார்கள். அவர்களுக்கு வேறு மார்க்கம் இல்லை. அதனால் நப்பாசையில் ஏதேதோ சொல்கிறார்கள் அவர்களது அறிவிப்புகளை அறிவிக்கவா வானொலி தயாராக இருக்கிறது?

அவர்களுக்கு சொல்வேன். பழைய வாதங்களைத் திரும்பத் திரும்பச் சொல்வதால் மக்களை நீங்கள் ஏமாற்றமுடியாது.

திண்டுக்கல் தேர்தலுக்குப் பின்னர் நிலைமை மாறிவிட்டது.

முதல்வர் புரட்சித் தலைவருக்குப் பின்னால் மாபெரும் சக்தி உள்ளது. இதை ஏற்றுக் கொண்டால் யாருக்கு நல்லது? நாட்டுக்கு நாட்டு மக்களுக்கு நல்லது.

இன்றையதினம் நான் அமைச்சராக இல்லை. ஆனால் என்னோடு இருந்தவர்கள் அமைச்சர்களாக இருக்கிறார்கள். அதை எண்ணிப் பெருமைப்பட வேண்டும். திராவிட இயக்க உணர்வுள்ள ஒவ்வொருவருக்கும் இந்த எண்ணம் வந்தாக வேண்டும். இந்த எண்ணம் வளருமானால் ஆதிக்க சக்திகளுக்கு தமிழகத்தில் இடமிருக்காது.

### மூப்பனாருக்கு பதில்

திருச்செந்தூரில் பேசிய கருப்பையா மூப்பனாரும் ஏ. ஆர். மாரிமுத்துவும் காவிரி நீர் வராததற்கு காரணம் முதல்வர் புரட்சித்தலைவர் தான் என்று உண்மைக்கு மாறான கருத்துக்களை கூறியிருக்கிறார்கள்.

கருப்பையா மூப்பனார் கிண்டலாக பேசியிருக்கிறார். கர்நாடகத்தில் காங்கிரஸ் கட்சி ஆட்சியில் இல்லை. எதிர்க்கட்சி ஆட்சி தான் உள்ளது. போய் கேட்டுப் பாருங்களேன் என்று கிண்டல் செய்கிறார்.

74-ம் ஆண்டிலிருந்து 8 ஆண்டுகள் ஆகியும் இந்த பிரச்சினையைத் தீர்க்காதவர்கள் இன்றையதினம் கிண்டல் செய்கிறார்கள்.

இன்றைய தினம் கர்நாடக முதல்வர் ஹெக்டே "காவிரி தண்ணீரைத் திறந்து விடத் தயார்" என்று அறிவித்துள்ளார்.

கருப்பையாமூப்பனாரே உங்களை திருச்செந்தூர் முருகன் காப்பாற்றட்டும். நீங்கள் கிண்டல் செய்தீர்கள். இன்று அது நடந்திருக்கிறது.

ஏ. ஆர். மாரிமுத்து என்பவர் திருச்செந்தூரில் மக்களுக்கு விவரம் தெரியாது என்ற எண்ணத்தில் பேசியிருக்கிறார்.

நாங்கள் அவசரநிலை ஆட்சிக்காலத்தில் இருந்த போது 1976—77-லே டெல்லி சார்பில் சுகாதியா கவர்னராக இருந்த போது காவிரி நீர் பிரச்சினைக்காக சிந்தித்து செயலாற்றி திட்டம் போட்டோம். பின்னர் கையெழுத்துப் போட தயாராக இருந்தோம். மக்கள் பிரதிநிதிகள் வந்து கையெழுத்துப் போடட்டும் என்றுவிட்டு விட்டோம். எம். ஜி. ஆர். அந்த திட்டத்தில் கையெழுத்துப் போடவில்லை. இன்று தண்ணீர் இல்லை, என்று அவர் பேசியிருக்கிறார்.

### இவர்களா இப்படி பேசுவது?

கருப்பையா மூப்பனார் ஏ. ஆர். மாரிமுத்து இருவரும் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்தவர்கள், இவர்கள் இப்படிப் பேசலாமா?

நாட்டு மக்கள் ஏமாறுவார்கள் என்று கருதுகிறீர்களா?

அவர்களுக்கு அடுக்கடுக்கான ஆதாரங்களைச் சொல்ல முதல்வர் புரட்சித்தலைவர் தயாராக உள்ளார்.

ஒருமுறை காவிரி நீர் பிரச்சினை சம்பந்தமாக சர்வகட்சிக்கூட்டம் நடந்த போது இதே ஏ. ஆர். மாரிமுத்து என்ன சொன்னார்? அந்த திட்டத்தை ஆதரிக்காதீர்கள், அதனால் பெரும பாதகங்கள் ஏற்படும் என்று சொன்னவர்தான் ஏ. ஆர். மாரிமுத்து.

தி.மு.க. ஒத்துக்கொள்ளாத, அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் ஒத்துக்கொள்ளாத திட்டம் அந்த திட்டம்.

அதை ஏற்றால் தஞ்சையில் 3 லட்சம் ஏக்கர் நிலங்கள்பாழ்நிலங்களாக ஆகும் என்ற நிலை ஏற்படும் என்றதால் தான் புரட்சித்தலைவர் அந்த திட்டத்தில் கையெழுத்துப் போடவில்லை.

### மக்கள் உணர வேண்டும்

இதை மக்கள் உணர வேண்டும்.

அரிசி பிரச்சினையில் ஆணவமாக குரல் கொடுத்த மத்திய மந்திரி அங்கே இல்லை. வேறு இலாகாவுக்கு அவர் மாற்றப்பட்டுள்ளார்.

அரிசியை கேட்காதீர்கள். கோதுமையைக் கேளுங்கள் என்று ஹாஜா செரீப் கூறுகிறார். இவர்கள் தான் நம்மை ஆள விரும்புகிறார்கள், மக்கள் இதை எண்ணிப் பார்க்க வேண்டும்.

மத்திய தொகுப்பிற்கு நீ அரிசி கொடுக்கவில்லை. அதனால் தர மாட்டேன் என்றால், கேரளா, மேற்கு வங்காளம் எந்தக் காலத்தில் அரிசி கொடுத்திருக்கிறது?

### நாங்கள் கேட்க மாட்டோமா?

அவர்களுக்கு எப்படி கொடுக்கலாம் என்று நாங்கள் கேட்க மாட்டோமா?

தமிழ் நாட்டிலுள்ள காங்கிரஸ்காரர்கள் தமிழ் நாட்டு மக்களின் உரிமைக்காக குரல் கொடுக்கத் தயாராக இல்லை.

ஆந்திர முதல்வராக வந்துள்ள என். டி. ராமாராவ் தேசயத்தைச் சொல்லி இன்று ஆட்சிக்கு வரவில்லை. தேசியத்தைச் சொல்லியிருந்தால் அவர்கள் ஆட்சிக்கு வந்திருக்க முடியாது.

அண்ணாவின் குரலை, புரட்சித்தலைவரின் குரலை எதிரொலித்தார். "என் நாடு தெலுங்கு தேசம் என் மொழி தெலுங்கு" என்றார். அதனால் இன்று முதல்வராகவந்துள்ளார்.

தி. மு. க. தோழர்களுக்கு நான் சொல்வேன். யார் பெரியவர் என்று பிரித்துப் பார்க்காதீர்கள். தமிழ் நாட்டு மக்களின் நலனைப் பாதுகாக்க புரட்சித் தலைவரின் அணிக்கு வாருங்கள்.

இவ்வாறு கழகப்பொருளாளர் மாதவன் பேசினர்.

### கூட்ட விவரம்

கூட்டத்திற்கு மணியப்பன் தலைமை தாங்கினார். சென்னை மாவட்ட எம். ஜி. ஆர். மன்றசெயலாளர் மதுசூதனன், மண்ணடி கிருஷ்ணமூர்த்தி, ஜி.கே. சாமி மயிலை ராமசாமி, கு. கஜேந்திரபாபு, எஸ் பி டி விஜயன், எஸ். ஜெகந்நாதன், எம். பி. ஆனந்தன், ரவி, ஏகாம்பரம், சாமிநாதன் வீரராகவன், பரமசிவம் ஆகியோரும் கூட்டத்தில் கலந்து கொண்டு பேசினர்.

---

### பஞ்சாப் கவர்னராக ஏ. பி. சர்மா பதவி ஏற்பு

சண்டிகார், பிப். 22— பஞ்சாப் மாநில கவர்னராக ஏ.பி. சர்மா நேற்று பதவி ஏற்றார்.

பஞ்சாப் - அரியானா உயர்நீதிமன்றத்தலைமை ஆக்டிங் நீதிபதி பி. சி. ஜெயின் புதிய கவர்னருக்குப் பதவிப் பிரமாணம் செய்து வைத்தார்.

பஞ்சாப் முதல்வர் தர்பாரா சிங் மற்ற அமைச்சர்கள் அப்போது இருந்தனர்.

---

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

இடத்தை கண்ணியத்திற்குரிய காயிதேமில்லத் குடும்பத்துக்கு தர முடிவு செய்து விட்டார்.

### இது நியாயமா?

அந்த ஒரே காரணத்திற்குத் தான் முஸ்லிம்லீக் நம்முடன் உறவை முறித்துக் கொண்டதே தவிர கொள்கை வேறுபாடு கிடையாது.

இந்த ஒரே காரணத்திற்காகத் தான் முஸ்லிம் லீக் நம்முடன் உறவை முறித்துக்கொண்டது.

கண்ணியத்திற்குரிய காயிதேமில்லத்தின் மகனுக்கு இடம் தரப்படுவதை அப்துல் சமத் எதிர்த்து உள்ளார் என்றால் அது நியாயமா?

நீங்களே முடிவு செய்து கொள்ளுங்கள்.

(அநியாயம் அநியாயம் என்று மக்கள் குரல்)

இவ்வாறு கழக கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா பேசினார்.

### கூட்ட விவரம்

இந்தக் கூட்டத்திற்கு ரோஸ்மேரி தலைமை வகித்தார்.

கழக வேட்பாளர் அமிர்தராஜ், வியாகத் அலிகான், மதுரை எஸ். பாண்டியன், கணேஷ் சித்திக், ரசாக், யூசுப் ஆகியோரும் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

---

## காயிதேமில்லத் மகனுக்குத் தந்த பதவியை தனக்குக் கேட்டார் அப்துல்சமத்

# முஸ்லிம் சமுதாயத்துக்கு புரட்சித்தலைவர் அரசின் ஏராள சலுகைகள்

## செல்வி ஜெயலலிதா முழக்கம்

**தூத்துக்குடி, பிப். 22- இஸ்லாமிய மக்களுக்கு புரட்சித் தலைவர் அரசு அளித்துள்ள அடுக்கடுக்கான சலுகைகளை செல்வி ஜெயலலிதா விளக்கிக் கூறினார். கண்ணியத்துக்குரிய காயிதே மில்லத் அவர்களின் மகன் மியாகானுக்குத் தந்த எம். எல். சி. பதவியை தனக்குக் கேட்டவர் அப்துல் சமத் என்ற தகவலையும் செல்வி ஜெயலலிதா வெளியிட்டார்.**

காயல் பட்டினம் கூட்டத்தில் கலந்து கொண்டு பேசுகையில் கழக கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா கூறியதாவது:-

இரண்டாவது முறையாக நான் இங்கே வந்துள்ளேன். இங்குள்ள இஸ்லாமிய சகோதரிகள் வெளியே வரமுடியாத காரணத்தால் நானே அவர்களை சந்தித்துப் பேச வந்தேன்.

பெண்கள் சீனாவுக்கு சென்றாவது கல்வி கற்க வேண்டும் என்று நபிகள் நாயகம் சொல்லியுள்ளார்.

பெண்கள் கல்வி கற்று சிறந்து விளங்க வேண்டும் என்பதற்காக கொடைக்கானலில் பெண்கள் பல்கலைக்கழகத்தை முதல்வர் புரட்சித் தலைவர் அமைத்து வருகிறார்.

### உள்ளம் பூரிக்கிறது

பெண்கள் கல்வி, விதவைத் திருமணம் ஆகியவற்றை 1500 ஆண்டுகளுக்கு முன்பே நபிகள் நாயகம் எடுத்துச் சொல்லியுள்ளார். இதை எண்ணிப் பார்க்கும் போது நம் உள்ளம் பூரிக்கிறது.

அதைத்தான் முதல்வர் புரட்சித் தலைவர் இன்றைய தினம் செய்து வருகிறார்.

இஸ்லாமிய சகோதரிகளுக்காக நல்ல திட்டங்களை முதலவர் புரட்சித் தலைவர் கொண்டு வந்துள்ளார்.

இஸ்லாமிய சகோதரிகள் வீட்டில் இருந்து கொண்டே கல்வி கற்க வசதி உள்ளது. மதுரை காமராஜர் பல்கலைக் கழகத்தில் தபால் மூலம் கல்வி கற்றுக் கொடுக்கப்பட்டு வருகிறது.

மார்க்கக் கல்வி கற்கும் அதே நேரத்தில் அவர்கள் உலகக் கல்வியையும் கற்றுக்கொள்ள முடியும். அந்த வகையில் அஞ்சல்வழி பாடத்தின் மூலம் பயன் பெற்று வருகின்றனர்.

பெண்களுக்கு மதிப்பு கொடுப்பதில் இஸ்லாமிய சமுதாயம் முக்கியத்துவம் கொடுத்து வருகிறது.

ஆணும் பெண்ணும் சமம் என்று சொல்லப்படுகிறது. அதனால் இஸ்லாமிய சமுதாயத்தின் மீது மதிப்பு ஏற்படுகிறது.

புரட்சித்தலைவர் இஸ்லாமிய சமுதாயத்திற்கு விரோதி அல்ல.

உலமாக்களுக்கு உதவிப்பணம் அளித்து வருபவர் புரட்சித் தலைவர் தான். இஸ்லாமிய மார்க்கத்தை ஏற்றுச் செயல்படும், அரபு நாட்டில் கூட இந்தத் திட்டம் கடைபிடிக்கப்படவில்லை.

மதரசாக்களில் மார்க்கக் கல்வி கற்றுத் தரும் பெண்களுக்கு உதவித் திட்டம் ஒன்றை புரட்சித் தலைவர் கொண்டு வந்துள்ளார்.

இதன் மூலம் அந்த பெண்களுக்கு மாதம் 250 ரூபாய் உதவிப்பணம் கிடைக்கும்.

### உமறுப்புலவர் பெயரில்நினைவு மண்டபம்

எட்டயபுரத்தில் உமறுப் புலவர் பெயரில் நினைவு மண்டபம் எழுப்பி வருகிறார்.

நாகர்கோவிலில் செய்குத்தம்பி பாவலர் பெயரில் நினைவு மண்டபம் ஒன்றையும் எழுப்பி வருகிறார்.

தமிழ் நாட்டில் தமிழ் பேசும் ராவுத்தர் மரைக்காயர்களை பிற்பட்ட பட்டியலில் சேர்த்த ஆட்சி திமுக ஆட்சியல்ல. கழக ஆட்சிதான்.

கண்ணியத்திற்குரிய காயிதேமில்லத் விழாவை ஆண்டுதோறும் புரட்சித் தலைவர் அரசுதான் நடத்தி வருகிறது.

இஸ்லாத்தில் கூறப்படும் 5-வது கடமையான ஹஜ் யாத்திரை போவதைஇஸ்லாமியர்கள் மேற்கொண்டு வருகின்றனர்.

இதற்கு முன் பம்பாயிலிருந்து ஹஜ் யாத்திரை போக வாரக்கணக்கில் தங்க வேண்டியிருந்தது.

### ரூ. $1\frac{1}{2}$ கோடி செலவில் ஹஜ் இல்லம்

அவர்கள் இப்போது சென்னையில் இலவசமாகதங்கிச்செல்லக்கூடிய வகையில் ரூ. $1\frac{1}{2}$ கோடி செலவில் ஹஜ் இல்லம் அமைக்கப்பட்டு வருகிறது.

ஹஜ்பயணம் செய்பவர்கள் டிக்கெட்டுகள் கிடைத்து பம்பாய் செல்லும் வரை அங்கே இலவசமாக தங்கி இருக்கலாம்.

ஹஜ் பயணிகளுக்கான இந்த வசதியை இந்தியாவில் வேறு எந்த மாநில அரசும் செய்யவில்லை. முஸ்லிம் லீக், கழகத்துடன் முன்பு தோழமையாக இருந்தது.

77-ம் ஆண்டு வரை நட்பு இருந்தது.

வேலூர் நாடாளுமன்ற இடைத் தேர்தலில் அப்துல் சமத்திற்காக புரட்சித்தலைவர் அந்த இடத்தை விட்டுக் கொடுத்தார். அவர் மக்கள் ஆதரவு இல்லாமல் தோற்றுப் போனார்.

77-ம் ஆண்டு நடந்த சட்ட மன்றத் தேர்தலில் அவர்களுடன் நமக்கு உடன்பாடு இருந்தது. 5 இடங்களை முஸ்லிம் லீகுக்கு நாம் விட்டுக் கொடுத்தோம்.

அவர்கள்வாணியம்பாடி என்ற ஒரு தொகுதியில் வெற்றிபெற்றனர். அதன் பிறகும் அவர்கள் நம்முடன் நட்பு உறவு வைத்து இருந்தார்கள்.

அவர்கள் உறவை நாம் உதாசீனப்படுத்தவில்லை.

தமிழக மேலவையில் ஒரு இடம் கேட்டார்கள்.

அந்த இடத்தை கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத்தின் மகன் மியாகானுக்கு புரட்சித் தலைவர் கொடுத்தார்.

அப்துல் சமது அந்த பதவியை எம்.எல்.சி. பதவியை தனக்கு தரவேண்டும் என்று கேட்டார்.

ஆனால் புரட்சித் தலைவரோ அந்த

(5-ம் பக்கம் பார்க்க)

---

# விண்ணில் பறந்தபோது விமானிக்கு மயக்கம்: பயணி ஓட்டினார் விமானத்தை

நியூசிலாந்து, பிப். 22— மண்ணில் இருந்து "விர்" என்று விண்ணில் பறந்து கொண்டு இருந்தது ஒரு விமானம்.

நடுவானில் விமானம் பறந்து கொண்டு இருந்தபோது அதற்கு ஒரு பேராபத்து வந்தது.

ஆறு பேர் பயணம் செய்யும் விமானம் அது.

நடுவானில் பறந்து கொண்டு இருந்த போது திடீரென்று விமான ஓட்டத்தில் பாதிப்பு ஏற்பட்டது.

காரணம் விமானத்தை ஓட்டி வந்த விமான ஓட்டிக்கு திடீரென்று மயக்கம் ஏற்பட்டது. அதனால் பாதிப்பு ஏற்பட்டது.

உடன் வந்த பயணிக்கு இந்த ஆபத்து புரிந்து விட்டது,

பைலட்டின் மயக்கத்தால் விமானம் விபத்துக்குள்ளாகாமல் காக்கப்பட பைலட்டின் இடத்திற்கு பயணிவிரைந்தார். பைலட்டின் இடத்தில் அந்தப் பயணி அமர்ந்து சுமார் 30 நிமிட நேரம் விமானத்தை செலுத்தினார்.

இந்த விமானத்தை இயக்கிய பயணி விமானம் ஓட்டக்கற்று இருந்தவர். இவர் பைலட் லைசென்ஸ் வைத்திருந்தார்.

ஆனால் இவர் இவருடைய அனுபவத்தில் மேக மூட்டத்திற்கு மேல் விமானத்தை ஓட்டியதில்லையாம்.

அதுமட்டுமல்ல, இரட்டை என்ஜின் பொருத்தப்பட்ட விமானத்தை இதுவரை ஓட்டியதில்லையாம்.

ஆனாலும் இந்த விமானத்தை சமாளித்து ஓட்டி விபத்தில் இருந்து தப்ப வைத்தார்.

மயக்கமுற்று இருந்த ஒரிஜனல் பைலட் சிறிது நேரத்தில் மயக்கம் தெளிந்து விழித்துப் பார்த்தார். நல்லவேளை ஆபத்து அகன்ற மகிழ்ச்சியில் திளைத்தார்.

பின்னர் அவர் விமானத்தை வெலிங்டனுக்கு வடக்கே 120கிலோ மீட்டர் தொலைவில் உள்ள பாமர்ஸ்டன்நார்த் என்ற இடத்தில் பத்திரமாக இறக்கினார். நல்ல வேளையாக ஒரு விமானம் விபத்தில் இருந்து தப்பியது.

---

### சைக்கிள் திருட்டு: இருவர் கைது

சென்னை, பிப். 22— சென்ட்ரல் ரயில் நிலையத்தில் நிறுத்திவைக்கப்பட்டிருந்த இரண்டு சைக்கிள்களைத் திருடியதாக வில்லிவாக்கம் முத்து, ஆதம்பாக்கம் செல்வராஜ் ஆகியோரை சப்-இன்ஸ்பெக்டர் அருண்குமார் கைது செய்தார். ஜார்ஜ் டவுன் கோர்ட்டில் அவர்கள் ஆஜர் செய்யப்பட்டு 15 நாள் காவலில் வைக்கப்பட்டனர்.

---

# பகிரங்கமாக சண்டை போடாதீர்: காங்கிரசாருக்கு மேலிடம் புத்திமதி

புதுடெல்லி, பிப். 22— பகிரங்கமாக ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொள்ளாதீர்கள் என்று இ. காங்கிரசாரை மேலிடம் கேட்டுக் கொண்டது.

இ. காங்கிரசார் ஒருவரை ஒருவர் திட்டி மேடையில் பேசுவதோ, பத்திரிகைகளில் அறிக்கை வெளியிடுவதோ கூடாது என்றும் அப்படிசெய்தால் அது கட்சிக் கட்டுப்பாட்டை மீறியதாகக் கருதப்படும் என்றும் ஒருவரைப் பற்றி ஒருவர் புகார் சொல்ல அடிக்கடி டெல்லிக்குவரும் வழக்கத்தையும் கைவிட வேண்டும் என்றும் கட்சி மேலிடம் கேட்டுக் கொண்டுள்ளது. இது சம்பந்தமாக கட்சியின் மாநில கமிட்டிகளுக்கு மேலிடம் உத்தரவிட்டு சுற்றறிக்கை வெளியிடுமாறும் கேட்டுக் கொண்டுள்ளது.

முதலமைச்சர்கள் மற்றும் அமைச்சர்கள் பற்றியும் புகார்கள் கூறக் கூடாது என்று இ. காங்கிரசாருக்கு கட்சியின் பொறுப்புத்தலைவர் கமலபதி திரிபாதி கூறினார். உடனே அவரிடம் "அப்படியானால் 1985 வரை இ காங்கிரஸ்முதல்வர்கள் மாற்றப்பட மாட்டார்களா?" என்று நிருபர்கள் கேட்டனர். அதை உங்கள் முடிவுக்கே விடுகிறேன் என்று திரிபாதி கூறினார்.

---

திருச்செந்தூரும் பெரியகுளம்தான் - எனும் தேர்தல் முடிவுக்கு உழைத்திட புறப்படு!

மாநிலங்களவை
உறுப்பினராக

# மோகன ரங்கம் பதவி ஏற்றார்

புதுடெல்லி, பிப். 22— மாநிலங்களவை உறுப்பினராக கழகஉறுப்பினர் மோகனரங்கம் நேற்று பதவி ஏற்றார்.

அவர் தமிழில் பதவிப் பிரமாணம் எடுத்தார்.

மோகனரங்கம் ஏற்கனவே மாநிலங்களவை உறுப்பினராக இருந்தார்.

அதோடு தமிழக அரசின் டெல்லி சிறப்புப் பிரதிநிதியாகவும் பணியாற்றி வந்தார்.

சிறப்பு பிரதிநிதியாக இருப்பதால் எம்.பி. யாக இருக்கும் தகுதியை இழந்து விட்டார் என்று அறிவிக்கப்பட்டது. அதன் பிறகு அவர் சிறப்பு பிரதிநிதிபதவியை ராஜிநாமா செய்தார். மீண்டும் மாநிலங்களவைக்கு தேர்ந்து எடுக்கப்பட்டார். நேற்று பதவிப் பிரமாணம் எடுத்தார்.

---


## இணை உப்பளக் கமிஷனர் அலுவலகம்

தபால் பெட்டி எண் 706
சாஸ்திரி பவனம்
சென்னை 6

இணை உப்பளக் கமிஷனர், "சாஸ்திரி பவன்" சென்னை-6 அவர்களால் கீழ்க்காணும் வேலைகளுக்கான முத்திரையிட்ட டெண்டர்கள் 28—2—83 பிற்பகல் 3 மணிவரை பெற்றுக்கொள்ளப்பட்டு அதே தினம் பிற்பகல் 3-30 மணிக்கு திறக்கப்படும்.

எஸ்டிமேட் எண்: 20/81 82 வேலையின் பெயர் அதிராம்பட்டினத்திலுள்ள தொழிற்சாலை அலுவலக கட்டிடத்திற்கு மாற்றங்கள் மற்றும் இணைப்புகள் செய்தல்.

உத்தேச செலவு: ரூ. 88,658/-

முன்வணித் தொகை டெபாஸிட்: ரூ. 1,773/-

டெண்டர் பத்திரங்கள், தேவைப்படும் குறிப்புகள் ஆகியவை (a) உப்பளமேற்பார்வையாளர், கடலூர் வட்டம், (b) உப்பள தொழிற்சாலை அதிகாரி, அதிராம்பட்டினம், உப்பள தொழிற்சாலை, அவர்களிடமிருந்து 26—2—83 வரை அலுவலக நேரங்களில் பெறுக கொள்ளலாம்.

davp 563(363)82


Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D.M.K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029
Editor: PARASURAMAN

---

அரிசி பற்றாக்குறைக்கு ஆட்சியை அகற்றகோரி

# 6 அவுன்ஸ் அரிசி தந்தவர்களா ஊர்வலம் நடத்துவது?

## செல்வி ஜெயலலிதா சாட்டை

தூத்துக்குடி, பிப். 22- அரிசி பற்றாக்குறைக்கு இந்த ஆட்சியை அகற்றக் கோரி ஆறு அவுன்ஸ் அரிசி போட்டவர்களா ஊர்வலம் செல்வது என்று செல்வி ஜெயலலிதா கேட்டார்.

கழக கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா நேற்று இரண்டாவது நாளாக கழக வேட்பாளர் அமிர்தராஜை ஆதரித்து திருச்செந்தூர் தொகுதிக்கு உட்பட்ட ஆறுமுகநேரி, காயல்பட்டினம், திருச்செந்தூர் ஆகிய பகுதிகளில் தீவிர பிரச்சாரம் செய்தார்.

செல்வி ஜெயலலிதா சென்ற இடமெல்லாம் மக்கள் பல்லாயிரக்கணக்கில் கூடி உற்சாக வரவேற்பளித்து எங்கள் வாக்கு சத்துணவு தந்த புரட்சித்தலைவரின் வேட்பாளர் அமிர்தராஜுக்கே என்று முழக்கமிட்டனர்.

திருச்செந்தூர் தொகுதி ஆறுமுக நேரியில் நடந்த பரம்மாண்டமான தேர்தல் கூட்டத்தில் கலந்து கொண்டு செல்வி ஜெயலலிதா பேசுகையில் கூறியதாவது:—

புரட்சித்தலைவர் 23-ந் தேதி முதல் திருச்செந்தூர் தொகுதியில் கழக வேட்பாளருக்குஆதரவு திரட்ட பிரச்சாரத்தில் ஈடுபடுகிறார். யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே என்பார்கள். நான் மணியோசை. கழக வேட்பாளருக்கு ஆதரவு திரட்ட இங்கு வந்துள்ளேன்.

### தென்னகத்திற்கே வழிகாட்டும் தலைவர்

ஆந்திராவில் என். டி. ராமாராவ் ஆட்சி நடக்கிறது. அவர் முதல்வர் புரட்சித்தலைவரை என் சகோதரர் என்கிறார். கர்நாடகத்திலும் ஆட்சி மாற்றம் ஏற்பட்டுள்ளது. காங்கிரஸ் ஆட்சி மாற்றப்பட்டு ஜனதா ஆட்சி ஏற்பட்டுள்ளது. தென்னகத்திற்கே வழிகாட்டக்கூடிய தலைவராக புரட்சித் தலைவர் விளங்கிக் கொண்டிருக்கிறார். தென் மாநில முதல்வர்கள் கூட்டத்திற்கு ஹெக்டே ஏற்பாடு செய்து வருகிறார்.

பெரியகுளம் நாடாளுமன்ற தொகுதிக்குநடந்த இடைத் தேர்தலுக்கு கோசல்ராம் ஒரு நாள் தான் வந்தார். அங்கு காங்கிரஸ் கட்சிக்கு டெபாசிட் போயிற்று. இங்கு பல நாள் தங்கி தேர்தல் பணிகளில் ஈடுபடுகிறார். என்ன முடிவு ஏற்படப்போகிறதோ? பெரியகுளத்தில் நீந்தி கரையேற முடியாதவர்கள் வங்கக் கடலில் நீந்தி விடலாம் என்று ஆசைப் படுகிறார்கள்.

### காங்கிரசில் உட்பூசல்

நான் (கோசல்ராம்) வேண்டுமா? எம்.ஜி.ஆர். வேண்டுமா என்று கேட்கும் கோசல்ராம் கட்சியான காங்கிரசுக்குள்ளே கோசல்ராமா? இல்லை செல்வராஜா என்று போட்டி யிருக்கிறது உட்பூசல் என்பது காங்கிரசில் பரம்பரை பரம்பரையாக உள்ளது. தேர்தலைப் பற்றி சிந்திக்காது யார் பெரியவர்என் பதிலேயே குறியாக இருக்கிறார்கள். டெபாசிட்டையாவது காப்பாற்றிக் கொள்வது நல்லது.

### வேடிக்கையாக இருக்கிறது

கழக ஆட்சிக்கு எதிராக இந்திராகாங்கிரசார் ஊர்வலமாகச் சென்று கவர்னரிடம் மனுக் கொடுத்துள்ளார்கள். அரிசி பற்றாக்குறை ஏற்பட்டதால் இந்த அரசை டிஸ்மிஸ் செய்ய வேண்டுமாம்? அதிலும் ஊர்வலத்தை துவக்கி வைத்தவர் யார் தெரியுமா? சிவாஜி கணேசன். ஆந்திராவில் என். டி. ராமாராவ் ஆட்சிக்கு நாகேஸ்வரராவ் ஆதரவு தெரிவிக்கிறார். இங்கே புரட்சித்தலைவர் ஆட்சி டிஸ்மிஸ் செய்யப்பட வேண்டுமென்று சிவாஜி கணேசன் கூறுகிறார். என்ன வேடிக்கையாக இருக்கிறது.

3 ஆண்டுகளாக பருவ மழை தவறியபோதும் அரசு தன் கடமையைச் சரிவரச் செய்துள்ளது. பருவமழை தவறியதால் உணவு உற்பத்தி பாதிக்கப்பட்டு அரிசி பற்றாக் குறை ஏற்பட்டுள்ளது. இந்தியா ஒன்று என்று கூறுவோர் என்ன செய்தார்கள்?

மைய அரசு 50 லட்சம் டன் அரிசியை கையிருப்பில் வைத்துள்ளது. தமிழகத்திற்கு மாதம் 80 ஆயிரம் டன் கொடுப்பதால் ஒன்றும் ஆகி விடாது. அரிசியை உணவாகக் கொள்வோர் தமிழகத்தில் தான் அதிகம். வடக்கே கோதுமைதான் அதிகமாக உணவாகப் பயன்படுகிறது.

அரிசி தரக்கூடாது என்று தி. மு. க. வினரும் காங்கிரசாரும் கோஷம் போடுகிறார்கள். அரிசி கொடுக்காதே என்பவர்கள் ஆள வேண்டுமா?

எங்களுக்குத் தவறான தகவல் தரப்பட்டது. அதனால் அரிசி தர வில்லை என்கிறது மைய அரசு. அப்படியானால் தவறான தகவலைத் தந்தது யார்? அரிசி தரக் கூடாது என்று கூறும் காங்கிரசும் தி.மு.க.வும் நாட்டை ஆள வேண்டுமா?

காங்கிரஸ் ஆட்சி காலத்தில் 6 அவுன்சு அரிசி தான் கொடுத்தார்கள். கருணாநிதி ஆட்சிக் காலத்திலோ 1 படி அரிசி 10 ரூபாய் என்ற அளவுக்கு இருந்தது. இவர்கள் நம்மைப் பார்த்து கூறுகிறார்கள் விலை உயர்ந்து விட்டதென்று.

மின் உற்பத்தியைப் பெருக்க நிலக்கரி தாருங்கள் என்றால் தர மறுக்கிறார்கள் வெளிநாட்டில் வாங்கவும் தடை விதிக்கிறார்கள்.

மின்வெட்டைக் காரணமாகக் கொண்டு ஆட்சி கலைக்க வேண்டும் என்கிறார்கள். காங்கிரஸ் ஆளும் குஜராத்திலும் கேரளாவிலும் மின்வெட்டு உள்ளது இதற்கு காங்கிரசார் என்ன பதில் சொல்லுகிறார்கள்? யார் ராஜினாமா செய்யவேண்டும்?

### மாற்றாந்தாய் மனப்பான்மை

ஆறு காஸ் டர்பைன்களை இறக்குமதி செய்ய மத்திய அரசு தமிழகத்திற்கு அனுமதி மறுத்து விட்டது. ஆனால் பீகாருக்கு மட்டும் காஸ் டர்பைன் இறக்குமதிக்கு அனுமதி வழங்கியுள்ளது. மாற்றாந்தாய் மனப்பான்மையுடன்மையஅரசு செயல்படுகிறதுஎன்பதற்கு இதைவிட வேறு உதாரணம் என்ன வேண்டும்?

### எல்லாம் தெரிந்த ஏகாம்பரம்

தி. மு. க. வில் எல்லாம் தெரிந்த ஏகாம்பரம் ஒருவர் இருக்கிறார், அவர் பனம்பழத்தைக் கூட கரடி முட்டை என்பார். அரிசி பிரச்சினைக்காக முதல்வர் புரட்சித் தலைவரும், ஆளுநர் குரானாவும் டெல்லி சென்றனர். புரட்சித் தலைவருடன் எப்படி ஆளுநர் குரானா போக முடியும் என்று மனோகரன் கேட்கிறார். ஒரு மாநிலத்தின் ஆளுநர் என்ற முறையில் அந்த மாநில மக்கள் பிரச்சினைகளுக்காக செல்வதில் என்ன தவறு? தி. மு. க. தனது வயிற்றெரிச்சலைத்தீர்க்க ஆளுநர் குரானா மீது பாய்கிறது.

இவ்வாறு செல்வி ஜெயலலிதா பேசினார்.

### கூட்ட சிறப்பு

எழுச்சியோடு நடைபெற்ற இக்கூட்டத்திற்கு அமராவதி தலைமை வகித்தார். கூட்டத்தில் ஆலடி அருணா, கோவை தம்பி எம். எல். ஏ., ஆர். கே. பெருமாள் எம். எல். ஏ., ராமலட்சுமி, கோவில்பட்டி ஜெயச்சந்திரன் ரத்தினசபாபதி, அருமைநாயகம் மற்றும் பலர் பேசினர். இந்தக் கூட்டத்தில் செல்வி ஜெயலலிதா இரு ஆண் குழந்தைகளுக்கு வேங்கையன், சிங்கத்தமிழன் என்றும் ஒரு பெண் குழந்தைக்கு ஜீவா என்றும் பெயர் சூட்டினார்.

---

# சர்விஸ் கமிஷன் தேர்வு கேள்வித்தாள் விவகாரம்: 2பேர் கைது

சென்னை, பிப். 22- சர்விஸ் கமிஷன் தேர்வு பற்றிய கேள்வித்தாள் வெளியானது சம்பந்தமாக 2 பேர்களைப் போலீசார் கைது செய்துள்ளனர்.

தமிழ்நாடு அரசு பணியில் சேருவதற்கான சர்விஸ் கமிஷன் 4-வது குரூப் தேர்வு கடந்த 13-ந் தேதி நடந்தது. கேள்வித்தாள் முன்கூட்டியே வெளியாகி விட்டதாக புகார் செய்யப்பட்டதன் பேரில் ரகசிய போலீசார் தேர்வு நடந்த இடங்களுக்குச் சென்று விசாரணை தொடங்கினர்

கேள்வித்தாள் வெளியானதில் 2பேர் சம்பந்தப்பட்டு இருப்பதாக போலீசார் கண்டு பிடித்து அவர்களைக் கைது செய்துள்ளனர்.

கைது செய்யப்பட்டவர்களில் ஒருவர் பெயர் நடேசன். இவர் அரசு அச்சக தொழிலாளி. (மெஷின் மேன்) மற்றொருவரின் பெயர் நாகபூஷணம். இவர் சென்னை மாநகராட்சியில் சிப்பந்தியாக பணியாற்றுபவர். (உதவி இன்ஸ்பெக்டர்) பணம் வாங்கிக் கொண்டு இவர் கேள்வித்தாளை வெளியிட்டதாகக் கூறப்படுகிறது.

இந்த 2 பேர்களும் காவலில் வைக்கப்பட்டுள்ளனர். மேலும் போலீசார் தீவிர புலன் விசாரணை செய்து வருகிறார்கள்.

---

# உயிருடன் இருப்பவருக்கு இரங்கல் தெரிவித்த ம. பி. சட்டசபை

போபால், பிப். 22— உயிருடன் இருப்பவருக்கு மத்திய பிரதேச சட்டசபையில் இரங்கல் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

மேற்குவங்காள முன்னாள் முதல்வர்கள் பி. சி. கோஷ் மற்றும் பி. சி. சென் இவர்களில் பி.சி. கோஷ் சமீபத்தில் இயற்கை எய்தி விட்டார்.

பி.சி. சென் ஜனதாக் கட்சியின் தலைவராக உள்ளார். சென் உடல் நிலை மோசமாக உள்ளதால் சிகிச்சை பெற்று வருகிறார்.

மத்திய பிரதேச சட்டசபை நேற்று கூடிய போது மேற்கு வங்க முன்னாள் முதல்வர் பி. சி. கோஷ் மறைவுக்கு அனுதாபம் தெரிவிக்கவிரும்பியது. ஆனால் சட்டசபையில் பேசும் போது உயிருடன் இருக்கும் பி. சி. சென் பெயரைகுறிப்பிட்டு "சென் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்து சட்டசபையின் இன்றைய பிற அலுவல்கள் ஒத்தி வைக்கப்படுகின்றன" என்று சபையில் அறிவிக்கப்பட்டது. எல்லோரும் 2நிமிட நேரம் மவுனமாக நின்று அஞ்சலி செலுத்தினர். பி.சி. கோஷ் மறைவுக்கு அனுதாபம் தெரிவிப்பதற்கு பதில் இவ்வாறு பெருந்தவறு நேர்ந்துள்ளது.

---

பரிசு வாங்கி
திரும்பும்போது

# பஸ் மோதி சிறுவன் மரணம்

சென்னை, பிப். 22— தியாகராய நகரைச் சேர்ந்தவர் நடராஜன், இவரது மகன் பாபு. (வயது 11) இவன் ராயப்பேட்டையில் உள்ள ஒரு பள்ளியில் படித்து வருகிறான்.

நேற்று இந்தப்பள்ளி ஆண்டுவிழா நடந்தது. போட்டி ஒன்றில் பாபு பரிசு பெற்றான். நேற்று பரிசு வாங்குவதற்காக தனது தந்தையுடன் ஸ்கூட்டரில் சென்றான்.

ஆண்டு விழா முடிந்து பரிசு பெற்று அண்ணா சாலைவழியாக அவர்கள் ஸ்கூட்டரில் வந்து கொண்டிருந்தபோது ஒரு பஸ் மோதியதுஸ்கூட்டரிலிருந்து இருவரும் தூக்கி எறியப்பட்டனர்.

இந்த விபத்தில் பாபு இறந்து விட்டான் அவனது அப்பா நடராசன் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு சிகிச்சை பெற்று வருகிறார் பஸ் டிரைவர் கைது செய்யப்பட்டிருக்கிறார்.

---


ஆவின்

தமிழ்நாடு பால் உற்பத்தியாளர்கள் கூட்டுறவு இணையம்
ஆவின்இல்லம், பால்பண்ணை, மாதவரம்
சென்னை-51.

எங்கள் புது தொலைபேசி எண்கள் கீழே தரப்பட்டுள்ளன.

அலுவலகம் (5 எண்கள்) 64531 to 35
நிர்வாக இயக்குனர் (தனி) 647122

DIPR/6140/83/NAS

தந்தி : பெரியார்
தொலைபேசி எண்கள்: 33213
இல்லம்: 31922

தமிழக எண்ணெய்ப் பலகாரம்
தயாரிப்பு & விற்பனை நிலையம்,
92. திருப்பரங்குன்றம் சாலை-மற்றும் கிளைகள்,
உரிமையாளர்: பே.தேவசகாயம் - மதுரை.

அறிவுப் போட்டியில் கலந்து கொள்ளுங்கள்

ரூ. 40,000 பெறுமானமுள்ள பரிசுகளை வெல்லுங்கள்

Shivaji Ganesan Kartik Kamal Hasn
Radhika Radha Sri Priya

1-வது பரிசு : கலர் டிவி அல்லது ரூ. 7500/- ரொக்கம்
2-வது பரிசு : பிளாக் அண்ட் ஒயிட் டிவி அல்லது ரூ. 2500/- ரொக்கம்.
3-வது பரிசு : டேப்ரிகார்டர் அல்லது ரூ. 1000/- ரொக்கம்.
ஆறுதல் பரிசு : ஏவொன் மிக்ஸர் குறைந்த விலையில் ரூ. 280/- அல்லது 2 பேண்ட் டிரான்சிஸ்டர் ரூ. 180/-

"உங்களுக்குப் பிடித்தமான திரைப்பட நட்சத்திரத்தைத் தெரிந்தெடுங்கள்" போட்டியில் மதிப்புமிக்க பரிசுகளை வெல்லுங்கள்.

இது ஒரு விற்பனை அதிகரிப்பு திட்டம். இந்தியாவவெங்கிலும் எமது ஏவொன் மிக்ஸரை பிரபலமாக்குவது இதன் நோக்கம்.

நீங்கள் செய்யவேண்டியது:
இங்கே எண் கொடுக்கப்பட்ட புகைப்படங்களில் மிகப்பிரபலமான கதாநாயகர் யார்? என்று நீங்கள் கருதுகிறீர்கள் என்பதை ஒன்று, இரண்டு, மூன்று என்ற வரிசைப்படுத்தித் தெரிந்தெடுங்கள். அதேபோல் கதாநாயகியையும் தெரிந்தெடுத்து வரிசைப்படுத்துங்கள்.

விதிகள் : ஒரு குடும்பத்திலிருந்து ஒரு நுழைவுச் சீட்டுதான் அனுப்பலாம். சாதாரண காகிதத்திலோ தபால் கார்டிலோ கூட எழுதி அனுப்பலாம். பிடித்தமான யோசனைகளுக்கு பரிசு உண்டு. முடிவு வெளியானவுடன் வெற்றிபெற்றவர்களுக்குத் தெரிவிக்கப்படும். நிர்வாகத்தின் முடிவே இறுதியானது. உங்கள் நுழைவுத்தாளை 15 நாட்களுக்குள் அனுப்பி வைக்கவும். உங்கள் முகவரியை ஆங்கிலம் அல்லது ஹிந்தியில் மட்டுமே எழுத வேண்டும்.

Avon Electronics
WZ 173/1A, Shadi Pur, New Delhi-110008

அஞ்சலக டைம் டெப்பாஸிட்களுக்குரிய வட்டி விகிதம் மேலும் உயர்ந்திருக்கிறது

1 வருட டைம் டெப்பாஸிட் ஆண்டுக்கு 9%
2 வருட டைம் டெப்பாஸிட் ஆண்டுக்கு 9.75%

3, 5 வருட அஞ்சலக டைம் டெப்பாஸிட்களுக்கு, முன் போலவே 10.5% வட்டி பெறுவீர்கள்.

வட்டி அவ்வாண்டுக்குரிய விகிதப்படி கணக்கிடப்பட்டு, வருடந்தோறும் வழங்கப்படும்.

மற்ற வசதிகள்

ரூ. 50ஆல் பெருக்கக்கூடிய தொகையில், எவ்வளவு வேண்டுமானாலும் டெப்பாஸிட் செய்யலாம். வருடத்துக்கு ரூ. 4,000/- வரையிலுமான வட்டி வருமான வரி விலக்குக்குரியது. ஒரு வருடம் நிறைவுற்ற பின்னர், உரிய காலத்திற்கு முன்னர் கணக்கை முடித்து விடலாம். இவ்வாறுயின் வட்டி 2% குறையும்.

விவரங்களுக்கு தயவு செய்து பின் வருபவர்களுடன் தொடர்பு கொள்ளுங்கள்:

- அஞ்சலகம்
- மாவட்ட சேமிப்பு அதிகாரி, தேசிய சேமிப்பு நிறுவனம்,
- அத்தாட்சி பெற்ற ஏஜெண்ட்.
- உங்கள் மாநிலத்தின் பிராந்திய இயக்குனர், தேசிய சேமிப்பு நிறுவனம், இந்திய அரசு,
- சிறு சேமிப்பு டைரெக்டொரேட், மாநில அரசு.

அல்லது பின்வரும் முகவரிக்கு எழுதுங்கள்
நேஷனல் ஸேவிங்ஸ் கமிஷனர்
12 ஸெமினரி ஹில்ஸ், நாக்பூர்-440006.

davp 82/456


---

## தமிழ்காக்கும் தலைவனுக்கே செந்தூரில் ஓட்டு
## தமிழ் விரோத சக்திகளுக்கு வைத்திடுவீர் வேட்டு!